76

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - ஐப்பசி - 2018 - அக்டோபர்

ஸ்ரீ ல ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியில்
அமைக்கப்பெற்ற நவராத்திரி கொலு அலங்காரம்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


விளம்பி - ஐப்பசி - 2018 - அக்டோபர் இதழ் - 76

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


### பொருளடக்கம்




தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

ஆலத்தை உண்டசிவன் அம்மையப்பன் என விளங்கும்
அத்தனைக் கொற்றவாள் ஈசன் தன்னை
அழல்வடிவம் கொண்டானை ஆரூ ரானை
அம்பலத்தில் திருநடம் ஆடு வானைச்
சூலத்தைக் கையேந்தும் சொக்கன் என்னும்
சுந்தரனை ஒருபாகம் பெண்ணை வைத்த
சோதியினைக் காமனையே நெற்றிக் கண்ணால்
சுட்டெரித்த பெருமானை உலகு போற்றக்
காலத்தைக் கடந்தானைக் கழனி வாசல்
கண்டுவந்த கருத்தானை அகத்தி யர்க்குக்
கவின்தமிழைத் தானுரைத்த கயிலை யானைக்
கரியதளைத் தானுடுத்த காத லானை
வேலொத்த கண்ணாளாய் விரும்பி வந்த
வித்தகியைத் திருநெல்லை என்னும் மாதை
வினைபோக்கி நமைக்காக்க வேண்டு மென்று
வீற்றிருப்பாள் திருவடியை வேண்டு வோமே.

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

நாம் நம்முடைய குருநாதர் 2011 ஆம் ஆண்டு பரம்பொருள் திருவடி சேர்ந்த பின்னர் துறவறம் ஏற்றுக்கொண்டோம். துறவறம் இயல்பாக நம்மை வந்தடைந்தது; நாம் கேட்டுப் பெறவில்லை. ஆனால் வந்து சேர்ந்த பின்னர் துறவறத்தின் மரபுகளைக் கட்டுப்பாடு, சம்பிரதாயங்களைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியமாகும்.

முக்கியமாக தன்னலம் துறந்து, தான் தனது என்ற அகம்பாவம் மமதை நம்மைவிட்டு விலகி எல்லா ஜீவர்களும் ஒன்றே என்ற பொது நோக்கே துறவறத்தின் ஆணி வேராகும். நம்மை அறிந்தவர்களுக்குத் தெரியும்; நம்முடைய பழக்கவழக்கங்களிலே அதிகமான மாற்றங்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் நமக்கு ஏற்படவில்லை.

துறவறம் என்பது விரிந்த உறவு என்பது அடிப்படைப் பொருள். அதனைக் கடைப்பிடிப்பதிலே நமக்கு எந்தச் சிக்கலும் எழவில்லை. அதேபோல் அகிம்சை – மற்ற எவ்வுயிர்க்கும் எந்த வகையிலும் துயரம் கொடுப்பதும் இல்லை; பயமுறுத்துவதும் இல்லை என்ற அடிப்படை அகிம்சா தத்துவம் இயல்பாகவே நம்மிடம் இருந்தது.

இட்லி, பிஸ்கட் இதனைப் பல் இல்லாத சூழ்நிலையில் உமிழ் நீரிலே கொஞ்சம் கொஞ்சமாக ஊறவைத்து அந்தப் பொருள் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து நம்முடைய உணவுக் குழாய்க்குள்ளே செல்கின்ற பொழுது அந்த உணவுப் பொருளின் சுவை உண்மையாகக்

கூடி இருக்கும். இதனை நாம் சொல்லுகின்ற மென்மையான உணவுப் பொருள்களைப் பல்லால் கடித்து உமிழ்நீர் உதவியோடு செலுத்துவதை விட, பல்லாலோ அல்லது முரனையாலோ கடிக்காமல் உமிழ்நீரில் மட்டும் ஊறவைத்து உணவுக் குழாயிலே செலுத்திப் பாருங்கள் நிச்சயமாக சுவை அதிகரித்திருக்கும்.

இது தான் அகிம்சையின் அடிப்படைக் கோட்பாடு. எந்தப் பொருளையும் அதிவேகமாக வன்முறையாக உடைத்து உண்பதை விட மெதுவாக ரசித்து ருசித்து உண்பது மேலானது போல நாம் அடுத்த உயிரைத் தாக்காமல் அரவணைத்து அன்பு செலுத்தித் துணையாகக் கொண்டு வாழ்வோமானால் நம் வாழ்வில் சோகம் இருக்காது. இன்பத்திற்குக் குறையிருக்காது. அதிகம் ஒரு துறவிக்குத் தேவைகள் இல்லாததால் அவன் யாருடனும் போட்டியிடத் தேவையில்லை; அவனோடும் யாரும் போட்டியிடத் தேவையில்லை. போட்டிகள் இல்லா இயல்பான வாழ்வை நமக்கு அருள்வதே அகிம்சா தத்துவமே தான்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



## அதிமதுர கவிகள் (தொடர்ச்சி)

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**கரியும் உமியும்**

அடுத்து ஒரு புலவர் கரி என்று தொடங்கி உமி என்று முடியும் ஒரு வெண்பாப் பாடுக! என்றதும் காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

*கரியதனை யேஉரித்த கையாவளையேந்(து)*
*அரிஅயற்கும் எட்டாத ஐயா! - பரிவாக*
*அண்டர் எல்லாம் கூடி அமுதம் கடைந்த பொழு(து)*
*உண்டநஞ்சை இங்கே உமி*

இதன் பொருள், தாருகாவனத்து முனிவர்கள் சிவனைக் கொல்ல அனுப்பிய யானையின் தோலை உரித்த கையினை உடையவனே! சங்கைக் கையிலே ஏந்திய திருமாலுக்கும் அயனுக்கும் அடிமுடிகாண இயலாத ஐயனே! தேவர்கள் அனைவரும் மிக்க விருப்பத்தோடு அமுதம் பெற வேண்டிக் கடலைக் கடைந்த பொழுது தோன்றிய ஆலகால நஞ்சை உண்ட நீ அந்த நஞ்சை இங்கே உமிழ்வாயாக!

**சீத்துப் பூத்து**

மற்றும் ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி சீத்துப் பூத்து என்ற சொல் வருமாறு ஒரு வெண்பாப் பாடுவீரா? என்று கேட்க உடனே காளமேகம் பாடிய வெண்பா இது.

*அப்பூரும் செஞ்சடைமேல் அம்புலியைப் பார்த்துப் பார்த்(து)*
*எப்போதும் சீத்துப்பூத்(து) என்னவே - எப்போதும்*
*வால் அங்(கு) ஆட் டாறிற்கும் வாய்அங்கா வாய்நிற்கும்*
*ஆலங்காட் டானபூண் அரா.*

இதன் பொருள், திருவாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான் அணிந்துள்ள பாம்பானது கங்கை தங்கியுள்ள சிவனின் திருமுடிமேல் உள்ள இளம்பிறையைப் பார்த்துப் பார்த்து எப்பொழுதும் சீத்துப் பூத்தென்று முப்போதும் வாலாட்டிக் கொண்டிருக்கும். வாலாட்டியதோடு எப்பொழுதும் வாய் அங்காந்து நிற்கும்.

### முக்கால் முதல் கீழரைவரை

முக்கால் முதல் கீழரை வரிசை முறை மாறாது ஒரு வெண்பாப் பாடும் என்று ஒரு புலவர் கேட்டதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

*முக்காலுக்(கு) ஏகாமுன் முன்நரையில் வீழாமுன்*
*அக்கா லரைக்கண்(டு) அஞ்சாமுன் - விக்கி*
*இருமாமுன் மாகாணிக்(கு) ஏகாமுன் கச்சி*
*ஒருமாவின் கீழரைஇன்(று) ஓது.*

இதன் பொருள், முதுமைப் பருவம் எய்தி அதனால் இரண்டு காலொடு கையில் ஒருதடியைப் பிடித்து மூன்று கால் ஊன்றி நடக்கும் நிலையை அடையும் முன்னர் தளர்ச்சியோடு நரைப்பருவத்தை அடையும் முன்னர் முதிர்ச்சி வந்த நிலையில் உயிர்கவர வரும்போது அந்த எமனுக் கஞ்சாது விக்கலும் இருமலும் வரும் முன்னர் பெருநிலம் என்று சொல்லக் கூடிய சுடுகாட்டிற்குச் செல்லும் முன்னர் காஞ்சிபுரத்திலே ஒப்பற்ற மாமரத்தின் கீழ் வீற்றிருக்கும் ஏகாம்பர நாதரைப் போற்றி வணங்குவாயாக. இந்த வெண்பாவில் முக்கால் அரைக்கால் அரை முதலிய அளவைகள் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

### ஐந்து டு ஒரு வெண்பாவில் வருமாறு பாடியது

ஐந்து டு ஒரு வெண்பாவில் வருமாறு பாடுக! என்று ஒருபுலவர் கேட்க அவ்வாறே காளமேகம் பாடியது இது.

*ஓகாமா வீதோடு நேரொக்க டுடுடுடு*
*நாகார் குடந்தை நகர்க்கதிபர் - வாகாய்*
*எடுப்பர் நடமிடுவர் ஏறுவர்அன் பர்க்குக்*
*கொடுப்பர் அணிவர் குழை*

இதன் பொருள், இளமரச் சோலைகள் நிறைந்த கும்பகோணம் என்னும் திருக்குடந்தை நகருக்கு இறைவனாகிய சிவபெருமான் ஓ காமாவீ அவர்தோ என்ற ஐந்து எழுத்துக்களையும் டுடுடுடு என்ற ஐந்து எழுத்துக்களுடன் முறையே பொருத்தினால் இறைவன் பிச்சாடண மூர்த்தியாக வந்த போது எடுத்தது ஓடு. அவர் நடனமிடும் இடம் காடு அவருடைய வாகனம் மாடு அடியவர்களுக்குக் கொடுப்பது வீடு. காதில் அணிந்திருப்பது தோடு.

**முச்சங்கத்தார் தலைவர்கள்**

முச்சங்கத்தார், அவர்கள் இயற்றிய நூல்கள் ஆகிய இவற்றை ஒரு வெண்பாவில் அமைத்துக் கூறுக என்ற புலவருக்குக் காளமேகம் கூறிய வெண்பா இது.

*நூலாநா லாயிரநா நூற்றுநாற் பத்தொன்பான்*
*பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான் - மேலாநாற்*
*பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்கும்*
*கர்த்தன் மதுரையில் சொக்கன்*

இதன் பொருள், நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பது நூல்களையும் அவற்றை இயற்றிய 4449 புலவர்களையும் அவர்களின் தலைவராகத் திகழ்ந்த நாற்பத்து ஒன்பதினரையும் உடைய மூன்று சங்கங்களுக்கும் அறுபத்து நான்கு ஆடலுக்கும் தலைவன் மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதப் பெருமானே.

**திருமாலின் பத்து அவதாரங்கள்**

திருமாலின் அவதாரங்கள் பத்தையும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடுக! என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் பாடிய வெண்பா இது.

*வெம்புகழ் வேங்கடவா வெண்பாவில் பாதியில்என்*
*இச்சையில் உன் சென்மம் எடுக்கவா - மச்சாகூர்*
*மாகேலா சிங்காவா மாராமா ராமாரா*
*மாகேலா பாலாமாவா வாய்*

இதன் பொருள், சான்றோர் பாராட்டும் படியான புகழ் வாய்ந்த வேங்கடவா! ஒரு வெண்பாவில் பாதியில் என்கருத்திற்கு இசைய உன் அவதாரங்களை எடுத்துக் கூறவா! மச்சாவதாரம் கூர்மாவதாரம் கோலம் என்னும் வராக அவதாரம் நரசிங்க அவதாரம், வாமனாவராதம், பரசுராம அவதாரம், ராமாவதாரம், பலராமன், கண்ணன், கல்கியவதாரம் ஆகிய பெருமானே.

**ஈயேற மலை குலுங்கும்**

ஈயேற மலை குலுங்கும் என்ற கருத்தமைய ஒரு வெண்பாப் பாடுக!

என்று கேட்ட புலவர்முன் உடன் பாடிய வெண்பா இது. சிறுபொருளாகிய ஈ பெரிய பொருளாகிய மலைமீது ஏறினால் மலை எப்படிக் குலுங்கும்? காளமேகம் அயரவில்லை. அவர் பாடிய வெண்பாவில் ஈயேற மலை குலுங்கியது. எப்படி? வெண்பாவைப் பார்த்தால் தெரியும்

*வாரணங்கள் எட்டும் மகமேரு வும்கடலும்*
*தாரணியும் எல்லாம் சலித்தனவால் - நாரணனைப்*
*பண்வாய் இடைச்சி பருமத்தினால் அடித்த*
*புண்வாயில் ஈமொய்த்த போது*

இதன் பொருள், ஆயர்பாடியில் கண்ணனாய் அவதரித்த நாராயணனைப் பண்போல இனிமையாகப் பேசும் ஆயர்குலப் பெண்கள் அவன் வெண்ணெய் திருடிய போது தங்கள் கையில் இருந்த பெரிய மத்தினால் அடித்த போது ஏற்பட்ட புண்ணில் ஈ மொய்த்த போது எண்திசை யானைகளும் மிகப்பெரிய மேரு மலையும் ஏழு கடல்களும் ஏழு உலகங்களும் குலுங்கின.

அவனுள் அனைத்தும் அடக்கம் என்பதால் அனைத்தும் குலுங்கின என்ற நயம் சிறந்தது.

**பொன்னாவரை இலை காய் பூ**

பொன்னாவரை இலை காய் பூ என்ற சொற்கள் வருமாறு ஒரு வெண்பாப் பாடும் என்று ஒரு புலவர் கேட்க, காளமேகம் உடன் பாடிய வெண்பா இது.

*உடுத்ததுவும் மேய்த்ததும் உம்பர்கோன் தன்னால்*
*எடுத்ததுவும் பள்ளிக்(கு) இசையப் - படுத்ததுவும்*
*அந்நாள் எறிந்ததுவும் அன்பின் இரந்ததுவும்*
*பொன்னா வரையிலைகாய் பூ*

இதன் பொருள், திருமால் ஆடையாக உடுத்தது பீதாம்பரம் என்கின்ற பொன்னாடை; கிருஷ்ணாவதாரத்தில் மேய்த்தது ஆ (பசு); இந்திரன் ஏவிய மேகங்கள் பொழிந்த பெருமழையில் இருந்து ஆயர்களைக் காப்பதற்காக எடுத்தது மலை (வரை); ஊழிக்காலத்தில் தான் கண் வளர்வதற்காகப் படுத்தது ஆலிலை; கம்சன் ஏவிய இரண்டு அசுரர்களில் ஒருவன் விளா மரமாகவும் ஒருவன் கன்றாகவும் வந்து

கண்ணனைக் கொல்ல முயன்ற போது கன்றை விளாமரத்தின் மேல் எறிந்தது; மாவலியிடம் சென்று மூன்றடிமண் இரந்தது.

### கடல் நடுவில் செந்தூள் தோன்றிய அதிசயம்

கடல் நடுவில் செந்தூள் தோன்றிய அதிசயம் எழுந்ததாகப் பாட முடியுமா? என்று கேட்ட புலவர் வியக்குமாறு கற்பனை செய்து காளமேகம் பாடிய பாடல் இது.

*சுத்தபாற் கடலில் நடுவினில் தூளி*
*தோன்றிய அதிசயம் இதுகேள்*
*மத்தகக் கரியை உரித்தவன் மீது*
*மதன்பொரு தழிந்திடும் மாற்றம்*
*வித்தகக் கமலை செவியுறக் கேட்டாள்*
*விழுந்துநொந் தயர்ந்தழு தோங்கிக்*
*கைத்தல மலரால் மார்புறப் புடைத்தாள்*
*எழுந்தது கலவையின் செந்தூள்*

இதன் பொருள், தூயபாற்கடலின் நடுவே தூளி தோன்றிய அதிசயத்தைக் கேள். தாருகா வனத்து முனிவர்கள் ஏவிய யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்ட சிவபெருமானிடம் சென்று அழிந்த மன்மதன் அழிந்ததைக் கேட்ட தாமரைமேல் இருக்கின்ற அறிவுடைய திருமகள் காது பொருந்தக் கேட்டாள். உடேன கீழேவிழுந்தாள். அயர்ந்தாள். ஓங்கி அழுதாள் தன் தாமரை மலர் போன்ற கையால் மார்பில் அடித்துக் கொண்ட போது அவள் மார்பில் பூசியிருந்த கலவைச் சாந்தின் செந்தூள் சிதறியது.

### மத்தால் அடித்தது

ஆய்ச்சியர் கண்ணனை மத்தால் அடித்த செயல் கண்டு இரக்கப் படுவது போன்ற பொருள் அமைய ஒரு வெண்பாப் பாடுக என்று ஒரு புலவர் கேட்கக் காளமேகம் பாடிய வெண்பா இது.

*வண்ணங் கரியனென்றும் வாய்வேத நாறியென்றும்*
*கண்ணன்இவன் என்றும் கருதாமல் - மண்ணை*
*அடிப்பது மத்தாலே அளந்தானை ஆய்ச்சி*
*அடிப்பது மத்தாலே அழ*

இதன் பொருள், கண்ணனை யசோதைப் பிராட்டி அடிப்பது கண்ட ஆய்ச்சியர் கண்ணன் பெருமைகளை எடுத்துக் கூறி அவளின் அறியாமையை எண்ணி அழுதனர்.

**என்னை இடுக்கடி பாயைச் சுத்தடி**

அடுத்ததாக ஒரு புலவர் எழுந்தார். என்னை இடுக்கடி பாயைச் சுத்தடி என்ற ஒரு சொல்லைக் கொடுத்து ஒரு செய்யுள் சொல்லும் பார்ப்போம் என்றதும் அடுத்த நொடியில் காளமேகம் பாடிய வெண்பா இது

***தடங்கடலில் பள்ளிகொள்வோம் இதனைநற் சங்கரனார்***
***அடற்புலிக் குட்டிக்கு அளித்தாராம் - அது கேட்டுநெஞ்சில்***
***நடுக்கம் வந்துற்றது கைகால் எழா நளித்தியென்னை***
***இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏகடி அம்பலத்தே***

இதன் பொருள், தாமரையில் இருக்கும் திருமகளே! இந்தப் பாற்கடலில் நாம் பள்ளி கொள்வோம் என இதனைச் சங்கரனர் வலிய புலிக்குட்டிக்கு அளித்தனர்; அது கேட்டு நெஞ்சில் நடுக்கம் வந்து விட்டது. ஆதலால் என்னை உன் கக்கத்தில் இடுக்கிக் கொள். பாயையும் சுருட்டிக்கொள் உன் அண்ணனாகிய சிவனின் அம்பலத்திற்கு ஏகுக.

**மார்பிலே கொம்பு முளைத்தவாறு**

பன்றிக்கு மார்பிலே கொம்பு முளைத்தவாறு என்பதாக ஒரு செய்யுளில் கூறுக! என்றார் ஒரு புலவர்; உடனே பாடினார் காளமேகம்.

***தெருமுட்டப் பாளைசிதற வளர்பூகத்***
***தருமுட்டச் செல்வாளைத் தாவும் - திருமுட்டத்(து)***
***ஊரிலே கண்டேன் ஒருபுதுமை பன்றிக்கு***
***மாரிலே கொம்பான வாறு***

ஸ்ரீமுஷ்ணம் என்ற ஊரிலே கோயில் கொண்டிருக்கும் இறைவன் பெயர் பூவராக சுவாமி என்பதாகும். அவர் மார்பிலே இருப்பவள் பூங்கொம்பு போன்றவளாகிய திருமகள். பெண்களைக் கொம்பு என்று அழைப்பதுண்டு. அதை வைத்துக் கற்பனையாகப் பாடிய வெண்பா இது. இதன் பொருள், தெருக்கள் நிறையப் பாளைகள் சிதறும்படி வளர்ந்த

கமுக மரங்களின் மேலே செவ்வாளை பாய்கின்ற நீர்வளம் பொருந்திய திருமுட்டம் என்ற ஊரிலே புதுமை கண்டேன்; அந்தப் பூவராக சுவாமி மார்பிலே பூங்கொம்பு இருந்தது. இங்கு கொம்பு என்பது திருமகளைக் குறிக்கும்.

**பொன்னாவரை இலை காய்பூ**

அடுத்து ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி நீர் பொன்னாவரை இலை காய் பூ என்ற தலைப்பில் பாடுக என்று கூறி இத்தலைப்பில் முன்னர் பாடி இருப்பினும் மீண்டும் அதே பொருளில் பாடுக என்றார். சலிக்காத காளமேகம் உடனே பாடிய செய்யுள் - இது.

***தோய்ந்தான் மேய்த்தான் குடையாத் தூக்கினான் மேன்மேலாச்***
***சாய்த்தான் எறிந்தான்பின் சாப்பிட்டான் - ஆய்ந்துசொலும்***
***மன்னா வரத்தில்வரு மால்சாமி நாதாகேள்***
**பொன்னா வரையிலை காய் பூ**

இப்படிக் கேட்ட புலவர் சாமிநாதன் என்பவர். ஆதலால் சாமிநாதா! கேள் என்று பாடினார் காளமேகம். எதனையும் ஆராய்ந்து சொலும் மன்னன் சபையில் வருகிற போக்கிலே வந்தமர்ந்தவரே கேளும் திருமால் பொன் போன்ற திருமகளைக் கலந்து இன்புற்றான். (தோய்ந்தான்) பசுக்கூட்டங்களை மேய்த்தான். மலை (வரை) குடையாத் தூக்கினான்; ஆலிலையில் படுத்தான் (சாய்ந்தான்); விளா மரத்தின் மேல் அதன் காயை எறிந்தான். பூமியைச் (மண்ணை) சாப்பிட்டான்.

**மும்முர்த்திகள்**

சிவன் திருமால் நான்முகன் எனக் கூறப்படும் மும்மூர்த்திகளின் பெயரும் அவர்கள் உண்ணும் உணவு ஏந்தும் ஆயுதம் பூணும் அணிகள் ஏறும் ஊர்திகள் வசிக்கும் இடங்கள் ஆகியன அனைத்தும் அடங்கிய வகையினில் ஒரு வெண்பாவை உம்மால் பாட முடியுமா? என்று ஒரு புலவர் கேட்க உடனே விரைந்து பாடிய வெண்பா இது.

***சிறுவன் அளைபயறு செந்நெல் கடுகு***
***மறிதிகிரி தண்டு மணிநூல் - பொறிஅரவம்***
***வெற்றேறு புள்அன்னம் வேதன்அரன் மாலுக்குக்***
***கல்தாழம் பூவே கறி.***

என்று பாடினார். கேட்ட புலவர் அயர்ந்து போனார். நான்முகன் சிவன் திருமால் எனப்படும் மும்மூர்த்திகளுக்கு, பயறும் பிள்ளையும் வெண்ணெயும் கறிகளாம். செந்நெல் நஞ்சு பூமி ஆகிய மூன்று உணவுகளாம். தண்டம் மான்குட்டி சக்கரம் ஆகியன ஆயுதங்களாம். முப்புரி நூல் பாம்பு கௌத்துவ மணி ஆகியன அணிகளாம். அன்னம் வெள்விடை கருடன் ஆகிய மூன்றும் வாகனங்களாம். தாமரை மலரும் கைலை மலை பாற்கடல் ஆகியன மூன்றும் வசிக்கும் இடங்களாம்.

### எழுத்தாணி சூரிக்கத்தி

எழுத்தாணி சூரிக்கத்தி என்று தொடங்கி சூரிக்கத்தி என்று முடிக்க வேண்டும் அப்படிப் பாட முடியுமா? உம்மால்? என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் பாடிய பாடல் இது.

*எழுத்தா ணியிதுபெண் ணிதனைமுனி காதில்*
*வழுத்தா ரணக்குகனை வாதுக் - கழைத்தும்*
*மாரன்கை வில்மான்முன் காத்ததுவும் நன்றாகும்*
*தீரமுள்ள சூரிக் கத்தி*

இதன் பொருள், எழுத்துக்களுள் ஆண் எழுத்து இதுவென்றும் பெண் எழுத்து இது என்றும் தமிழுக்கு அன்னை போன்ற அகத்திய முனி காதில் உபதேசித்து அருளிய வேதநாயகனான முருகப் பெருமானை வாதுக்கழைத்ததும் மன் மதன் கையில் வில்லாக விளங்குவதும் திருமால் முன்னாளில் தோன்றிக் காத்ததுவும் வீரமுள்ள சூரபதுமன் கரும்பு கசேந்திரன் என நன்றாகும். சூர்-இக்கு-அத்தி என்றவற்றை ஒன்று சேர்த்தால் சூரிக்கத்தி என வரும். சூர்-சூரன்; இக்கு-கரும்பு; அத்தி-யானை.

### பச்சை வடம் பாகு சேலைசோமன்

பச்சை வடம் பாகு சேலைசோமன் என்ற இந்தச் சொற்கள் வருமாறு ஒரு வெண்பாவைச் சொல்லும் என்ற புலவர் வியக்கும்படி காளமேகம் கணப்பொழுதில் பாடிய வெண்பா இது.

*மாயன் துயின்றதுவும் மாமலராள் சொல்லுவதும்*
*ஏய குருந்தில் கொண்டு ஏறியதும் - தூயை*
*இடப்பாகன் சென்னியின் மேல் ஏறியதும் பச்சை*
*வடப்பாகு சேலைசோமன்*

மாயவனாகிய திருமால் பேரூழிக் காலத்தில் பச்சை நிறமுள்ள ஆலிலையில் கண் வளர்ந்ததுவும் சிறந்த தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் திருமகள் பாகுபோல் இனிக்கும் சொல்லும் கண்ணன் குளத்தில் நீராடிக் கொண்டிருந்த கோபியரின் ஆடைகளைக் கவர்ந்து கொண்டு குருந்த மரத் தின்மேல் ஏறியதும் தூயவளான உமையவளை இடப்பாகத்தில் வைத்திருக்கும் சிவபெருமானின் திருமுடியில் ஏறி இருப்பதும் (சோமன்) பச்சை வடம் பாகு சேலை சோமன்.

### ராமா ராமா கோவிந்தா

ஓர் இளைஞன் ஓர் அழகான இளம்பெண்ணை வியப்புடன் ராமா ராமா கோவிந்தா! என்று இடைவிடாது கூறுவதுபோல் அமைந்த ஒரு வெண்பாவைச் சொல்லும் பார்க்கலாம் என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் கவிதையைப் பொழியத் தொடங்கியது. இந்த வெண்பா இதோ

*இந்தோ திலகநுதல் ராமரா மாவனசக்*
*கொந்தோ களபமுலை கோவிந்தா - சந்தமுறும்*
*வேலா இணைவிழிகள் வேங்கடவா நல்லவயி*
*றாலோகா ணாரா யணா*

இதன் பொருள், ராமராம! இந்தப் பெண்ணின் திலகம் உள்ள நெற்றி பிறை நிலவோ? மணச்சாந்து அணிந்த இவளது மார்பகங்கள் தாமரை மொட்டுக்களோ? வேங்கடவா விழிகளும் அழகிய வேல் நாராயணா! நல்ல வயிறு ஆலிலைதானோ.

### செருப்பு - விளக்குமாறு

காளமேகத்தை அவமானப் படுத்த வேண்டும் என்ற நோக்கிலே ஒரு புலவர் செருப்பு என்று தொடங்கி விளக்குமாறு என்று முடியும்படியாக ஒரு வெண்பாவைப் பாடும் பார்ப்போம் என்று சொன்ன அடுத்த நொடியில் ஒரு வெண்பாவைப் பாடினார். அந்த வெண்பா தான் இது.

முருகன் மேல் காதல் கொண்ட ஒரு பெண் முருகனைச் சேர்வதற்கான வழியைச் சொல்ல வண்டினைத் தூது செல்லச் சொல்வதாக இந்த வெண்பா அமைந்துள்ளது.

*செருப்புக்கு வேழனைச் சென்றுழக்கும் வேலன்*
*பொருப்புக்கு நாயகனைப் புல்ல - மருப்புக்குத்*
*தண்டேன் பொழிந்ததிருத் தாமரைமேல் வீற்றிருக்கும்*
*வண்டே விளக்கு மாறே*

இதன் பொருள், குளிர்ந்த தேனைப் பொழியும் அழகிய தாமரை மேல் தங்கியுள்ள வண்டே! போர்க்களத்தில் புகுந்து எதிர்த்த வீரர்களைச் சிதறச் செய்கின்ற வேலனைக் குறிஞ்சி நிலத்தலைவனை நான் தழுவும் உரிய வழியினை விளக்கும் வழியில் விளக்குக. செருப்பில் தொடங்கி விளக்குமாறு என்று முடிகின்ற நயத்தைக் காண்க.

**செங்கழுநீர்க் கிழங்கு**

கச்சிக் காவலன் என்னும் புலவன் செங்கழுநீர்க் கிழங்கு என்ற சொல் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடுக என்றதும் புலவன் வியக்குமாறு உடனே பாடிய வெண்பா இது.

*வா(து) அமணர் ஏறிதும் மாயன் துயின்றதுவும்*
*ஆதிதடுத்(து) ஆட்கொண்ட அவ்வுருவும் - சீதரனார்*
*தாள்கொண்(டு) அளந்ததுவும் தண்கச்சிக் காவரா!*
*கேள்செங் கழுநீர் கிழங்கு.*

இதன் பொருள், குளிர்ச்சி பொருந்திய கச்சி நகர்க் காவலனே! நீ குறித்த பொருளில் நான் பாடக்கேள். திருஞான சம்பந்தருடன் வாதிட்டுத் தோற்ற சமணர்கள் ஏறியதும் மாயவனாகிய திருமால் பள்ளி கொண்டு இருப்பதும் முதல்வனாகிய சிவபெருமான் சுந்தரரைத் தடுத்த அவ்வுருவும் அந்நாளில் திருமால் தன் திருவடி கொண்டு அளந்ததுவும் செங்கழுவும் நீரும் கிழவுருவும் பூமியும் ஆகும்.

இங்கு செங்கழு என்றால் பழுக்கக் காய்ச்சிய கழுமரம் என்பது பொருள். நீர் என்பது கழுவில் வழிந்த சிவந்த குருதியைக் குறிக்கும். பரந்தாமன் பள்ளி கொண்டு இருப்பது பாற்கடல். அது குறிக்கும் சீதரன் என்ற சொல் திருமாலைக் குறிக்கும்.

**கடுங்காற்றும் கடுநட்பும்**

திருமலைராயன் அவையில் பிறவா நெறிகாட்டியார் என்னுமொரு புலவர் இருந்தார். அவர் காளமேகத்தை நோக்கிக் கடுங்காற்று

மழைகாட்டும் கடுநட்புப் பகை காட்டும் என்ற தொடரை இறுதியாக வைத்து ஒரு வெண்பாவை இயற்றும் பார்க்கலாம் என்று கேட்ட நொடியில் காளமேகம் பாடிய வெண்பா இது.

*நீரோ பிறவா நெறிகாட்டி யார்எமக்கு*
*நீரோ சமிசை நிலையிட்டீர் - நீரோஇவ்*
*விங்கமென் செய்தீர் விடும்கடுகாற் றும்மழைகாட்*
*டுங்கடுநட் புப்பகை காட்டும்.*

இதன் பொருள், பிறவாத் தன்மைக்கு உரிய நெறிகாட்டும் ஞானவானாய் நீரே இருக்க இப்படிப்பட்ட சமிசையை எமக்குக் கொடுத்தீர்? இவ்வேறுபாட்டை எதற்காகச் செய்தீர்? இனியேனும் இதுபோல் செய்வதை விட்டுவிடும் வேகமாக வீசும் காற்று மழையைக் கொண்டுவரும். ஆராயாது விரைந்து கொள்ளும் நட்பு பகையைத் தரும்.

**குரங்கும் இடமும்**

இன்னொரு புலவர் குரங்கு என்று தொடங்கி இடம் என்று முடியுமாறு ஒரு வெண்பாப் பாடும் என்றிடக் காளமேகம் பாடிய வெண்பா இது.

*குரங்(கு) அனலில் வீழ்ந்து வெறிகொண்டு தேள்கொட்டக்*
*கரஞ்செறியப் பாம்(பு) அலவன் கவ்வ - விரைந்து போய்*
*பற்றவே கள் உண்டு பச்சைமிள கைக்கடித்தால்*
*எத்தனைபார் சேட்டைக்(கு) இடம்*

இதன் பொருள், ஒரு குரங்கு நெருப்பிலே விழுந்து விட்டது. அதனால் அதற்கு வெறி உண்டாயிற்று. அப்பொழுது ஒரு தேள் அதனைக் கொட்டிற்று அப்பொழுது அதன் கையில் ஒரு பாம்பு சுற்றிக் கொண்டது. நண்டு அப்பாம்பைக் கவ்வியது. பின் கள்ளைக் குடித்து. இத்தனைக்குப்பிறகு பச்சை மிளகையும் கடித்தது. ஒருசேட்டை செய்யப் போன குரங்கினால் எத்தனை சேட்டை பார்.

**புங்கங் கொம்பங்கிங் கொன்பது**

புங்கங் கொம்பு அங்கு இங்கு ஒன்பது என்ற சொற்கள் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடுக என்றார் ஒரு புலவர்; உடனே தாமதியாமல் ஒரு வெண்பாவை உரைத்தார் காளமேகம். அந்த வெண்பா இது.

*எங்கள் மடத்துக்(கு) எரிதுரும்பு வெட்டுதற்குப்*
*புங்கங்கொம் பங்கிங்கொன் பதுபுளி - யங்கொம்பங்*
*கிங்கொன்ப துவெட்டி நறுக்கிய வெள்வேலங்*
*கொம்பங் கிங்கொன் பது.*

இதன் பொருள், எங்கள் மடத்திற்கு வெட்டிய எரிக்கும் விறகு. இத்துடன் அங்கும் இங்குமாகக் கொண்டுவரப் பட்டவை; புங்க மரத்துக் கிளைகள் ஒன்பதும் புளியங்கொம்பு ஒன்பதும் வெட்டி நறுக்கிய வெள்வேலங் கொம்பு ஒன்பது ஆகும்.

### அப்பா யார்க்கும் இனிது

திருமலைராயனின் அவைக்களப் புலவர்கள் எப்படியாவது காளமேகத்தைத் திணறடிக்க வேண்டும் என்ற நோக்குடன் வாய்க்கு வந்தபடி சமி சைகளைக் கொடுக்கலாயினர். அந்த நிலையில் ஒரு புலவன் அப்பா யார்க்கும் இனிது என்று தொடங்கி யார்க்கும் இனிது என்று முடியும்படி வெண்பாவைப் பாட முடியுமா? உம்மால் என்றிடக் காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

*அப்பா குமரகோட் டக்கீரை செவ்விலிமேட்*
*டுப்பாகற் காய்பருத் திக்குளநீர் - செப்புவா*
*சற்காற்றும் கம்பத் தடியில் தவம்கருமா*
*றிப்பாய்ச்சல் யார்க்கும் இனிது.*

இதன் பொருள், அப்பனே! குமரகோட்டம் என்னும் இடத்தில் விளையும் கீரையும் செவ்விலி மேடு என்னுமிடத்தில் விளையும் பாகற்காயும் திருப்பருத்திக் குளத்துத் தண்ணீரும் காஞ்சிபுரக் கோவிலின் தெற்குக் கோபுர வாசலில் வருகின்ற காற்றும் ஏகம்பர் இருக்கும் மரத்தடியில் தவம் செய்தலும் கருமாறி என்னுமிடத்தில் நீரைப் பாய்ச்சலும் அனைவருக்கும் இனிதாகும்.

### கரியும் உமியும்

கரி என்று தொடங்கி உமி என்று முடியும்படியாக ஒரு வெண்பாவைப்பாடுக என்று ஒரு புலவர் வினவக் காளமேகமும் கரியதனை என்று தொடங்கும் வெண்பாவைச் சொன்னார். அப்பொழுது அவையில் இருந்த பெண்பாற் புலவர் ஒருவர் அதனையே

சமிக்ஞையாகக் கொடுத்துப் பாடுக என்றதும் அவரை ஏளனம் செய்யும் விதமாக அதே பாடலை மீண்டும் சொன்னார். அந்த வெண்பா இது.

*கரிக்காய் பொரித்தாள் கன்னிக்கா யைத்தீய்த்தாள்*
*பரிக்காயைப் பச்சடியாப் பண்ணாள் - உருக்கமுள்ள*
*அப்பைக்காய் நெய்த்துவட்டல் ஆக்கினாள் அத்தைமகள்*
*உப்புக்காண் சீச்சீ உமி*

இதன் பொருள், அத்தைமகள் அத்திக் காயைப் பொரித்து வைத்தாள்; வாழைக் காயைவதக்கி வைத்தாள். மாங்காயைப் பச்சடியாய்ச் செய்தாள் . கத்தரிக்காயை நெய்த்துவட்டல் ஆக்கினாள். ஆனால் அத்தனையும் உப்பு; ஆதலால் உமிழ்ந்து விடு.

**மன் - மலுக்கு**

அடுத்து ஒரு புலவர் எழுந்து மன் என்று தொடங்கி மலுக்கு என்று முடியுமாறு வெண்பா ஒன்று பாடுக. என்றதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

*மன்னுதிரு வண்ணா மலைச்சம்பந் தாண்டாற்குப்*
*பன்னும் தலைச்சவரம் பண்ணுவதேன் - மின்னின்*
*இளைத்தவிடை மாதர் இவன்குடுமி பற்றி*
*வளைத்திழுத்துக் குட்டா மலுக்கு*

இதன் பொருள், இதனைக் கேட்ட புலவர் சம்பந்தாண்டான் என்பவர். அவரை ஏளனம் செய்து பாடிய ெண்பா அவர் தலையை மழுங்கச் சவரம் செய்திருந்தார். அதனால் அதையே பொருளாக்கிப் பாடினார்.

நிலைத்த புகழுடைய திருவண்ணாமலையைச் சேர்ந்த சம்பந்தாண்டான் என்பவருக்குச் சிறப்பாகத் தலைச்சவரம் செய்வதேன்? மின்னல் போல் இடையுடைய பெண்கள் இவன் குடுமியை வளைத்து இழுத்துக் கொட்டாமலுக்கு என்பதை அறிக.



## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

*எத்தனை சொன்னாலும் - அகப்பேய்*
*என்மனம் தேறாதே*
*சித்தும் அசத்தும் விட்டே - அகப்பேய்*
*சேர்ந்தநீ காண்பாயே 21*

***விளக்கம் :*** எத்தனை சொன்னாலும் என்மனம் தெளிவு பெறாது. அறிவதை விட்டும் அறியாமையை விட்டும் நீ காண்பாயாக!

*சமயம் ஆறுமடி - அகப்பேய்*
*தம்மாலே வந்ததடி*
*அமைய நின்றஇடம் - அகப்பேய்*
*ஆராய்ந்து சொல்லாயே 22*

***விளக்கம் :*** காளா முகம் (மண்டையோட்டு மாலையணிந்து நரபலியிடும் ஒரு கூட்டத்தார் வழிபடும் சமயம்) சைவம் (சிவனை வணங்குபவர் உள்ள சமயம்) பாசுபதம் மகாவிரதம் சாமம் வைரவம் என்ற இவை ஆறும் உட்சமயங்கள் - ஆருகதம் உலகாயதம் பாஞ்சராத்திரம் பாட்டாசாரியம் பௌத்தம் மீமாம்சம் என்ற இவை ஆறும் புறச்சமயங்கள்; இவைகள் தாமாகவே தோன்றின. இவை பொருத்தமாக இருந்த இடம் எது வென்பதை ஆராய்ந்து சொல் அகப்பேயே!

*ஆறாறும் ஆகுமடி - அகப்பேய்*
*ஆகாது சொன்னேனே*
*வேறே உண்டாகும் - அகப்பேய்*
*மெய்யது சொல்வாயே 23*

***விளக்கம் :*** அகச்சமயங்கள் ஆறும் புறச்சமயங்கள் ஆறும் பெருக்கினால் 36 தத்துவங்களாக விரியும். ஆனால் அவ்வாறு ஆகாது என்று நான் சொன்னேன். வேறு உண்டாகும் என்று சொன்னேன் உண்மை எதுவென்று நீ சொல்க!

எப்பொருள் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது) அறிவு

என்பது எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்பதும் திருக்குறள் கூறும் செய்தி.

*உன்னை அறிந்தால் - அகப்பேய்*
*ஒன்றையும் சேராயே*
*உன்னை அறியும் வகை - அகப்பேய்*
*உள்ளது சொல்வேனே* 24

***விளக்கம் :*** நீ யாரென்று உன்னை நீயே அறிந்து கொண்டால் ஒன்றிலும் சேரமாட்டாய். எனவே உன்னை அறியும் வகை பற்றி உனக்குச் சொல்வேன். நான் உள்ளதைத் தான் சொல்வேன். இதைத் தான் கவியரசு கண்ணதாசன் ஒரு திரைப்படத்தில் பாடலாக்கினார். நீ உன்னை அறிந்தால் உயிர் வாழலாம் என்ற வரியே அது.

*சரியை ஆகாதே அகப்பேய்*
*சாலோகம் கண்டாயே*
*கிரியை செய்தாலும் - அகப்பேய்*
*கிட்டுவது ஒன்றும் இல்லை* 25

***விளக்கம் :*** பிச்சை எடுத்தல் ஆகாது. இறையுலகில் இருக்க முயற்சி செய். இது தவிர நீ எச்செயலைச் செய்தாலும் கிடைப்பது ஒன்றும் இல்லை.

*யோகம் ஆகாதே அகப்பேய்*
*உள்ளது கண்டக்கால்*
*தேக ஞானமடி - அகப்பேய்*
*தேடாது சொன்னேனே* 26

***விளக்கம் :*** உள்ளத்தில் இறைவன் இருப்பதைக் கண்ட போது யோகம் செய்வது ஆகாது. நம் உடலே ஞான வடிவானது. எதையும் தேடி அலையாமல் இதனைச் சொல்கின்றேன். உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் வள்ளல் பெருமானுக்கு வாய் கோபுரவாயில் கள்ளப் புலன் ஐந்தும் காளா மணிவிளக்கே என்பது திருமூலர் வாக்கு.

*ஐந்தலை நாகமடி - அகப்பேய்*
*ஆதாயம் கொஞ்சமடி - அகப்பேய்*
*இந்த விடம்தீர்க்கும் - அகப்பேய்*
*என்இறை கண்டாயே* 27

**விளக்கம் :** ஐந்தலை நாகம் எனப்படும் ஐம்பொறிகளால் உண்டாகும் ஆதாயம் கொஞ்சமே. இதனால் உண்டான நச்சு எண்ணங்களை என் இறைவன் தீர்ப்பான் என்பதைக் கண்டு கொண்டாயா?

*இறைவன் என்ற தெல்லாம் - அகப்பேய்*
*எந்த விதமாகும்*
*அறைய நீகேளாய் - அகப்பேய்*
*ஆனந்தம் ஆனதடி* 28

**விளக்கம் :** மனமாகிய பேயே இறைவன் என்பதெல்லாம் எந்த விதத்தில் சொல்லப்படும்? அதுபற்றி நான் சொல்வதைக் கேட்பாயாக. அது ஆனந்தம் என்று சொல்லப்படும்.

*கண்டு கொண்டேனே - அகப்பேய்*
*காதல் விண்டேனே*
*உண்டு கொண்டேனே - அகப்பேய்*
*உள்ளது சொன்னாயே* 29

**விளக்கம் :** அது எதுவென நான் கண்டு கொண்டேன். அதனால் நான் அன்பு கொண்டேன். நீ எனக்கு உள்ளதைச் சொன்னாயே.

*உள்ளது சொன்னாலும் - அகப்பேய்*
*உன்னாலே காண்பாயே*
*கள்ளமும் தீராதே - அகப்பேய்*
*கண்டார்க்குக் காலமடி* 30

**விளக்கம் :** அகப்பேயே! நீ உள்ளதைச் சொன்னாலும் அதனை உன் மூலமாகவே காண்பாய். அதனால் உண்டான களங்கமும் தீராதே. இதனைக் கண்டவர்க்கு இதுவே காலம்.

*அறிந்து நின்றாலும் - அகப்பேய்*
*அஞ்சார்கள் சொன்னேனே*
*புரிந்த வல்வினையும் - அகப்பேய்*
*போகாதே தன்னைவிட்டு* 31

**விளக்கம் :** அந்த இறை யாதென்று நீ அறிந்து கொண்டாலும் பிறர் அஞ்சமாட்டார். நீ செய்த வலிய வினை என்றும் உன்னை விட்டுப் போகாது.

*ஈசான பாசமடி - அகப்பேய்*
*இவ்வண்ணம் கண்டதெலாம்*
*பாசம் பயின்றதடி - அகப்பேய்*
*பரமது கண்டாயே* 32

*விளக்கம் :* இவ்வாறு கண்டதெலாம் சிவன்மேல் வைத்த பாசம். இவ்வாறு கண்டதெலாம் பாசத்தால் வந்தது. மேலான ஒன்றாகும்.

*சாத்திர சூத்திரமும் - அகப்பேய்*
*சங்கற்பம் ஆனது எல்லாம்*
*பார்த்திடல் ஆகாதே அகப்பேய்*
*பாழ்பலம் கண்டாயே* 33

*விளக்கம் :* அகப்பேயே! சாத்திரம் சூத்திரம் சங்கற்பம் ஆகியன அனைத்தும் பார்த்திடல் ஆகாது. அது மனவலிமையைப் பாழாக்கும் என்பது கண்டாயா.

*ஆறு கண்டாயோ - அகப்பேய்*
*அந்த வினைதீர*
*தேர்ந்து தெளிவதற்கு - அகப்பேய்*
*தீர்த்தமும் ஆடாயோ* 34

*விளக்கம் :* அகப்பேய்! நீ செய்த வினைகள் தீர்வதற்கான வழிமுறைகளைக் கண்டாயா? அத என்னவென்று ஆராய்ந்து தெளிவதற்காகத் தீர்த்தங்கள் ஆடமாட்டாயா?

*எத்தனை காலமுந்தான் - அகப்பேய்*
*யோகம் இருந்தால் என்?*
*முத்தனும் ஆவாயோ - அகப்பேய்*
*மோட்சமும் உண்டாமோ?* 35

*விளக்கம் :* இதை உணர்வதற்கு எத்தனை காலம்? யோகத்தில் இருந்தால் மட்டும் நீ முத்தன் ஆவாயோ அதனால் உனக்கு வீடுபேறு கிடைக்குமோ?

*நாசம் ஆவதற்கே - அகப்பேய்*
*நாடாதே சொன்னேனே*

*பாசம் போனாலும் - அகப்பேய்*

*பசுக்களும் போகாவே* *36*

***விளக்கம் :*** அகப்பேயே! நீ அழிவதற்கான முறைகளை நாடாதே; இதனை உனக்கு நான் சொல்லுகின்றேன்; உன்னிடம் உள்ள பாசம் போனாலும் ஆன்மாக்கள் போவதில்லை.

*நாணம் ஏதுக்கடி - அகப்பேய்*

*ஊனுள் நுழைந்தாயே*

*என்றனைக் காணாதே அகப்பேய்*

*இடத்தில் வந்தாயே* *37*

***விளக்கம் :*** இதற்காக உனக்கு நாணம் ஏன்? ஏ! மனமே! என்னைக் காணாது என் ஊனுக்குள் நுழைந்து விட்டாயோ என்னைப் பாராது என்னிடம் வந்தாயே.

*வானம் ஓடிவரில் - அகப்பேய்*

*வந்தும் பிறப்பாயே*

*தேனை உண்ணாமல் - அகப்பேய்*

*தெருவோடு அலைந்தாயே* *38*

***விளக்கம் :*** உனக்கு உயர்ந்த நிலை கிடைத்தாலும் மீண்டும் மீண்டும் இங்கு வந்து பிறக்கின்றாயே. இறை உணர்வாகிய தேனை உண்ணாமல் தெருவில் அலைகின்றாயே.

*சைவம் ஆனதடி - அகப்பேய்*

*தானாய் நின்றதடி*

*சைவம் இல்லையாகின் - அகப்பேய்*

*சலம்வரும் கண்டாயே* *39*

***விளக்கம் :*** சைவம் என்பது தானாய் நின்றது. அகப்பேயே! சைவம் இல்லையாகின் அதனால் பழிவரும் என்பதைக் கண்டாய் அல்லவா!

*ஆசை அற்றஇடம் - அகப்பேய்*

*ஆசாரம் கண்டாயே*

*ஈசன் பாதமடி - அகப்பேய்*

*எங்ஙனம் சென்றாலும்* *40*

***விளக்கம் :*** எவ்வித ஆசையும் இல்லாத இடம் ஒழுக்கமுடையது என்பதைக் கண்டாய் அல்லவா? எங்ஙனம் எங்கே எப்படிச் சென்றாலும் ஈசனின் பாதமே காணப்படும்.

***ஆணவ மூலமடி - அகப்பேய்***
***அகாரமாய் வந்ததடி***
***கோனும் உகாரமடி - அகப்பேய்***
***கூடப் பிறந்ததுவே 41***

***விளக்கம் :*** அனைத்திற்கும் ஆணவமே மூலம்; ஆதி முதல் வந்தது. உகாரம் கூடப்பிறந்தது.

***ஒன்றும் இல்லையடி - அகப்பேய்***
***உள்ளபடி யாச்சே***
***நன்றுஇலை தீ(து) இலையே - அகப்பேய்***
***நாணமும் இல்லையடி 42***

***விளக்கம் :*** ஒன்றும் இல்லை. ஆனால் உள்ளபடி வந்தது. நன்மை இல்லை. தீமையும் இல்லை. வெட்கமும் இல்லை.

***சும்மா இருந்தஇடம் - அகப்பேய்***
***சுட்டது சொன்னேனே***
***எம்மாயம் ஈ(து) அறியேன் - அகப்பேய்***
***என்னையும் காணேனே 43***

***விளக்கம் :*** சும்மா இருந்த இடம் எது? அதனைச் சுட்டிக் சொன்னே. அந்தச் சும்மா இருக்கின்ற இடம் அறிய எந்த மாயத்தை நான் கற்றேன்? அதை அறியப் போய் என்னையும் இழந்தேன்.

***கலைகள் ஏதுக்கடி - அகப்பேய்***
***கண்டார் நகையாரோ?***
***நிலைகள் ஏதுக்கடி? - அகப்பேய்***
***நீயார்? சொல்வாயே 44***

***விளக்கம் :*** கற்ற கலைகள் எதற்காக? கண்டவர்கள் அதுகண்டு சிரிக்க மாட்டார்களோ? நிலைத்து நிற்பது எதற்காக? நீ யார்? அதனைச் சொல்வாயோ?

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### அவா அறுத்தல்
### ஆசையை அறுத்தல்

**1. அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்**
**தவாஅப் பிறப்பு ஈனும் வித்து.**

அவா என்ப -ஆசை என்பது ; எல்லா உயிர்க்கும் - அனைத்து உயிர்களுக்கும்; எஞ்ஞான்றும்- எக்காலத்திலும் ; தவா அப் பிறப்பு ஈனும் வித்து -நீங்காத பிறப்பினை விளைவிக்கும் விதையாகும்.

ஆசை என்பது எல்லா உயிர்களுக்கும் எக்காலத்திலும் நீங்காத பிறப்பினை விளைவிக்கும் விதையாகும்.

**2. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றுஅது**
**வேண்டாமை வேண்டா வரும்.**

வேண்டுங்கால் - ஒன்றை வேண்டும் போது ; வேண்டும் பிறவாமை - பிறவாமையை வேண்ட வேண்டும் ; மற்றுஅது; அப்பிறவாமை என்பது ; வேண்டாமை வேண்டவரும் - ஆசையின்மையை வேண்ட வந்து சேரும்.

ஒருவன் ஒன்றை வேண்டும் போது பிறவாமையை வேண்ட வேண்டும்; அப்பிறவாமையும் ஆசையின்மையை விரும்பினால் தானே வந்து சேரும் .

**3. வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டு இல்லை**
**யாண்டும் அஃதொப்பது இல்.**

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் - ஆசையின்மையைப் போன்ற சிறந்த செல்வம் ; ஈண்டு இல்லை- இவ்வுலகில் இல்லை ; யாண்டும் - எங்கும் ; அஃதொப்பது இல் - அதனை ஒப்பது இல்லை.

ஆசையின்மையைப் போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகில் இல்லை ; எங்கும் அதனை ஒப்பதும் இல்லை.

**4. தூஉய்மை என்பது அவாஇன்மை மற்றது**
**வாஅய்மை வேண்ட வரும்.**

தூஉய்மை என்பது - மனம் தூய்மையாக இருப்பது என்பது;

அவாஇன்மை - ஆசையின்மை; மற்றுஅது - அந்த ஆசையின்மை தான்; வாஅய்மை வேண்ட வரும்- உண்மைப் பொருளை வேண்டினால் தானே உண்டாகும்.

மனம் தூய்மையாக இருப்பது என்பது ஆசை யின்மைதான்; அதுவும் உண்மைப் பொருளை வேண்டினால் தானே வரும்.

**5. அற்றவர் என்பர் அவா அற்றார் மற்றையார்**
**அற்றாக அற்றது இலர்.**

அற்றவர் என்பார் - பிறவி அற்றவர் எனச் சொல்லப்படுபவர் ; அவா அற்றார் - ஆசை அற்றவர்கள் ; மற்றையார் - மற்றவர்கள் ; அற்றாக- அவர்கள் போலத் தோன்றினாலும் ; அற்றது இலர்- பிறவிஅற்றிலர்;

பிறவி அற்றவர் எனச் சொல்லப்படுபவர்கள் ஆசை அற்றவர்கள் ; மற்றவர்கள் அவர்கள்போலத் தோன்றினும் பிறவி நீங்காதவர்கள் ஆவர்.

**6. அஞ்சுவது ஓரும் அறனே ஒருவனை**
**வஞ்சிப்பது ஓரும் அவா.**

அஞ்சுவது ஓரும் அறனே- ஆசை என்பதற்கு அஞ்சுவதே அறமாகும்; ஒருவனை வஞ்சிப்பது ஓரும் அவா - அந்த ஆசைதான் ஒருவனைக் கெடுக்கவல்லது.

ஒருவனை வஞ்சித்துக் கெடுக்கவல்லது ஆசை ; எனவே ஆசை என்பதற்கு அஞ்சுவது அறமாகும்.

**7. அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை**
**தான்வேண்டும் ஆற்றான் வரும்.**

அவாவினை ஆற்ற அறுப்பின் - ஆசையை முற்றிலும் அறுத்துவிட்டால்; தவாவினை- கெடுதல் இல்லாத வினை ; தான் வேண்டும் ஆற்றான் வரும் - தான் விரும்பியபடி யெல்லாம் வரும்.

ஒருவன் ஆசையை முற்றிலுமாக அறுத்துவிட்டால் கெடுதல் இல்லாத வினைகள் (பிறவியின்மை) தான் விரும்பியபடி எல்லாம் அவனுக்கு வந்து சேரும்.

**8. அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்**
**தவாஅது மேன்மேல் வரும்.**

அவா இல்லார்க்கு - ஆசை இல்லாதவர்களுக்கு ; இல்லாகும் துன்பம்- துன்பம் இல்லை ; அஃதுண்டேல் - ஆசை உண்டானால்; தவாஅது - முடிவில்லாது;மேன்மேல் வரும் - துன்பம் தொடர்ந்து வரும்;

ஆசை இல்லாதவர்களுக்குத் துன்பம் இல்லை ; ஆசை உண்டானால் துன்பம் முடிவில்லாது தொடர்ந்து வரும்.

**9. இன்பம் இடையறாது ஈண்டும் அவா என்னும்**
**துன்பத்துள் துன்பம் கெடின்.**

இன்பம் இடையறாது ஈண்டும்- இன்பம் இடைவிடாமல் நேரும் ; அவா என்னும்- ஆசை என்னும்;துன்பத்துள் துன்பம் கெடின் - துன்பத்துள்ளும் துன்பமாக உள்ளது கெட்டால்.

துன்பத்துள்ளும் துன்பமாக உள்ள ஆசை என்பது இல்லையானால் இன்பம் இடைவிடாமல் நேரும்.

**10. ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே**
**பேரா இயற்கை தரும்.**

ஆரா இயற்கை அவா நீப்பின்- நிறைவில்லாத இயல்பினை உடைய ஆசையை நீக்கினால்; அந்நிலையே - அப்பொழுதே ; பேரா இயற்கை தரும் - மாறாத இயல்பினைத்தரும்.

நிறைவடையாத இயல்பினைஉடைய ஆசையை நீக்கினால் அப்பொழுதே மாறாத இயல்பான வீடுபேற்றைத் தரும்.

## மெய் உணர்தல்
## உண்மையை உண்மையால் உணர்தல்

**1. பொருள்அல்ல வற்றைப் பொருள்என் றுணரும்**
**மருளான்ஆம் மாணாப் பிறப்பு.**

பொருள் அல்லவற்றை - உண்மைப் பொருள் அல்லாதவற்றை; பொருள் என்று உணரும் - உண்மையானது என்று உணர்கின்ற; மருளான் ஆம் - மயக்கத்தினால் ஆகும்; மாணாப் பிறப்பு - பெருமை இல்லாத பிறப்பு.

உண்மைப் பொருள் அல்லாதவற்றை உண்மையானது என்று உணர்கின்ற மயக்கத்தினால் பெருமை இல்லாத பிறப்பு உண்டாகும்.

**2. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி**
**மாசுஅறு காட்சி யவர்க்கு.**

இருள்நீங்கி - பிறப்பாகிய இருள் நீங்கி; இன்பம் பயக்கும் - வீடு பேற்றினைத் தரும்; மருள் நீங்கி - அறியாமை மயக்கம் நீங்கி; மாசறு காட்சியவர்க்கு - குற்றமற்ற அறிவுடையார்க்கு;

அறியாமை மயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவுடையார்க்குப் பிறப்பாகிய இருள் நீங்கி வீடு பேற்றினை மெய்யுணர்வு தரும்.

**3. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்**
**வானம் நணியது உடைத்து.**

ஐயத்தின் நீங்கி - ஐயம் நீங்கி; தெளிந்தார்க்கு - தெளிவுடன் மெய் உணர்ந்தவர்க்கு; வையத்தின் - உலகத்தை விட; வானம் நணியது உடைத்து - வானுலகம் மிகவும் அண்மையில் உள்ளதாகும்.

ஐயம் நீங்கி மெய் உணர்ந்து தெளிந்தவர்க்கு அவர்வாழும் உலகை விட வானுலகம் மிகவும் அண்மையில் உள்ளதாகும்.

**4. ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்றே**
**மெய்யுணர்வு இல்லாத வர்க்கு.**

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் - ஐந்து பொறிகளால் ஆகிய உணர்வு தம்வயப்பட்ட தானாலும்; பயம் இன்றே - பயன் இல்லையாகும்; மெய்யுணர்வு இல்லாதவர்க்கு - உண்மை உணர்வு இல்லாதவர்க்கு.

உண்மை உணர்வு இல்லாதவர்க்கு ஐந்து பொறிகளால் ஆகிய உணர்வு தம்வயப்பட்ட தானாலும் அவற்றால் பயனில்லையாம்.

**5. எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

எப்பொருள் - எந்த ஒரு பொருளும்; எத்தன்மைத்து ஆயினும் - எந்தத் தன்மை உடையதானாலும்; அப்பொருள் - அந்தப் பொருளின்; மெய்ப்பொருள் - உண்மைப் பொருளை; காண்பது அறிவு - காண்பது மெய் உணர்வான அறிவாகும்.

எந்த ஒரு பொருளும் எந்தத் தன்மை உடையதானாலும் அந்தப் பொருளின் உண்மைப் பொருளைக் காண்பது மெய் உணர்வான அறிவாகும்.

**6. கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்**
**மற்றுஈண்டு வாரா நெறி.**

கற்று - கற்று அறிந்து; ஈண்டு - இப்பிறவியில்; மெய்ப் பொருள் கண்டார் - உண்மைப் பொருளை உணர்ந்து கண்டவர்கள்; தலைப்படுவர் - அடைவர்; மற்று ஈண்டு வாரா நெறி - மீண்டும் பிறவாத நிலையினை;

இப்பிறவியில் கற்று அறிந்து உண்மைப் பொருளை உணர்ந்தவர்கள் மீண்டும் பிறவாத நிலையினை அடைவர்.

**7. ஓர்த்துஉள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்**
**பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு.**

ஓர்த்து - மெய்ப்பொருளை நினைத்து; உள்ளம் உள்ளது உணரின் - உள்ளமானது உண்மைப் பொருளை உணருமாயின்; ஒருதலையா - ஒரு நிலையில்; பேர்த்து - மறுபடியும்; உள்ள வேண்டா பிறப்பு - பிறப்பினை நினைக்க வேண்டாம்.

மெய்ப்பொருளை நினைந்து உள்ளமானது ஒரு நிலையில் உண்மைப் பொருளை உணருமாயின் மறுபடியும் பிறப்பினை நினைக்க வேண்டாம்.

**8. பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்**
**செம்பொருள் காண்பது அறிவு.**

பிறப்பு என்னும் பேதைமை - பிறப்பு உண்டென்று நினைக்கும் மெய் அறிவின்மை; நீங்க - நீங்க வேண்டுமானால்; சிறப்பு என்னும் - சிறப்புடையதாகக் கருதப்படுகின்ற; செம்பொருள் - உண்மைப் பொருளை; காண்பது அறிவு - காண்பதே அறிவாகும்.

பிறப்பு உண்டென்று நினைக்கும் மெய் அறிவின்மை நீங்க வேண்டுமானால் சிறப்புடையதான உண்மைப் பொருளைக் காண்பதே அறிவாகும்.

**9. சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்று அழித்துச்**
**சார்தரா சார்தரு நோய்.**

சார்பு உணர்ந்து - எல்லாவற்றுக்கும் சார்பான மெய்யறிவை உணர்ந்து; சார்புகெட ஒழுகின் - உலகப்பற்று என்பது நீங்குமாறு வாழ்ந்தால்; மற்று அழித்து - அதனை அழித்து; சார்தரா - சார்ந்துவராது; சார்தரு நோய் - தொடர்ந்து வரும் பிறவி நோய்.

எல்லாவற்றுக்கும் சார்பான மெய்யறிவை உணர்ந்து உலகப்பற்று என்பது நீங்குமாறு வாழ்ந்தால் அப்பற்றினை அழித்துத் தொடர்ந்து வரும் பிறவி நோய் சார்ந்து வராது.

**10. காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்**
**நாமம் கெடக்கெடும் நோய்.**

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் - ஆசை, கோபம், மயக்கம் என்னும் மூன்றின்; நாமம் கெட - பெயர்கள் கெடுமானால்; கெடும் நோய் - பிறவித் துன்பம் கெடும்.

ஆசை, கோபம், மயக்கம் என்னும் மூன்றின் பெயர்கள் மனத்திலிருந்து கெடுமானால் பிறவித் துன்பம் கெடும்.

**22.09.2018 அன்று இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில் சிலப்பதிகாரத்தில் மனையறம் படுத்த காதை என்னும் தலைப்பில் கவிஞர் நீ. இரவிச்சந்திரன் சொற்பொழிவாற்றினார்.**

## Available Knitted Fabric (On Order Basis)

| | |
|---|---|
| 18 GG Rib | Dia : 11 - 36 |
| 24 GG Single Jersey | Dia : 16 - 36 |
| 28 GG Single Jersey | Dia : 18 - 34 |
| 28 GG SJ Openwidth | Dia : 30 - 34 |

**Hosiery Yarn Available**

**PC [illegible] 100 % COTTON / SLUB / VISCOSE**

***THE PARADISE KNITTERS***

2/311, Periyandipalayam Pirivu,
6th Cross, Hare Rama Hare Krishna Nagar
Mangalam Road, **TIRUPPUR - 641 687**
Mobile : 98652 04051 , 98651 22844 , 98422 70168


## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

## பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

Thirumagal
04565 - 232991